உ

சிவமயம்



ஸ்ரீ புஷ்பதந்தர் பாடிய

# சிவமஹிம்ந: ஸ்தோத்ரம்

## ॥ शिवमहिम्नः स्तोत्रम् ॥

தமிழ் உரை:

ஞானபாஸ்கர, சிவோத்கர்ஷ வர்ஷக ப்ரம்மஸ்ரீ
P. N. நாராயண சாஸ்திரிகள்

महिम्नः पारं ते परमविदुषो यद्यसदृशी
स्तुतिर्ब्रह्मादीनामपि तदवसन्नास्त्वयि गिरः।
अथावाच्यस्सर्वः स्वमतिपरिणामावधि गृणन्
ममाप्येषः स्तोत्रे हर निरपवादः परिकरः ॥ १ ॥

மஹிம்ந: பாரம் தே பரமவிதுஷோ யத்யஸத்ருசீ
ஸ்துதிர்ப்ரம்மாதீநாமபி ததவஸந்நாஸ்த்வயி கிர: ।
அதாவாச்யஸ்ஸர்வ: ஸ்வமதிபரிணாமாவதி க்ருணந்
மமாப்யேஷ ஸ்தோத்ரே ஹர நிரபவாத: பரிகர: ॥ 1 ॥

1. பரமேச்வரனே! உன் பெருமையை முழுதும் அறிந்தவன் யார்? பொருத்தமில்லாத பிரம்மாதி தேவர்களைக் குறித்து செய்யப்படுகிற துதிகளும் வேதவாக்யங்களுடன் உன்னிடமே வந்தடைகின்றன. ஆகையினாலேயே உன்னைத்தவிர வேறுயாரும் துதிக்கத்தக்கவர் அல்ல என்று புத்தியால் தெளிந்து உன்னையே பேசுகிறார்களோ அவ்விதமே எனக்கும் இன்னொரு கடவுளைத் துதித்து விட்டுப் பிறகு வந்தேன் என்கிற அபவாதம் இல்லாமல் இந்தத் துதியைச் செய்ய அருள்புரிய வேண்டுகிறேன்.

अतीतः पन्थानं तव च महिमा वाङ्मनसयो-
रतद्व्यावृत्त्या यं चकितमभिधत्ते श्रुतिरपि ।
स कस्य स्तोतव्यः कतिविधगुणः कस्य विषयः
पदे त्वर्वाचीने पतति न मनः कस्य न वचः ॥ २ ॥

அதீத: பந்தாநம் தவ ச மஹிமா வாங்மநஸயோ:
அதத்வ்யாவ்ருத்த்யா யம் சகிதமபிதத்தே ச்ருதிரபி।
ஸ கஸ்ய ஸ்தோதவ்ய: கதிவிதகுண: கஸ்ய விஷய:
பதே த்வர்வாசீநே பததி ந மன: கஸ்ய ந வச:॥ 2 ॥

2. உன் பெருமையானது வாக்கு, மனதிற்கு எட்டாதவை. இதுவல்ல, இதுவல்ல என்று வேதமும் பயந்தே பேசுகிறது. உன்னுடைய பெருமையை எவரே பேச முடியும்? துதிக்கத் தகுந்த அவர் என்ன குணங்கள் கொண்டவர்? எவரால் அறியத் தகுந்தவர்? எனினும் உருவம் எடுக்கும் போது எவருடைய மனதும் வாக்கும் தான் செல்லாது? (அவசியம் செல்லும் என்றபடி)

அதத்வ்யாவ்ருத்யா:- நேதிநேதி என்னும் வாக்யத்தினால் உலகத்தை தள்ளி பரம்பொருளை உண்மை என்று கூறு

கிறது. அந்த பரம்பொருள் பரமேச்வரனேயாவர். அவர் பலவிதமான உருவங்களை எடுக்கிறபோது எல்லோருடைய மனதும் வாக்கும் அந்தப் பரமனைப் போற்றுவதில் ஈடுபடுகிறது என்றபடி.

मधुस्फीता वाचः परमममृतं निर्मितवतः
तव ब्रह्मन् किं वागपि सुरगुरोर्विस्मयपदम्।
मम त्वेतां वाणीं गुण कथनपुण्येन भवतः
पुनामीत्यर्थेऽस्मिन् पुरमथन बुद्धिर्व्यवसिता ॥ ३ ॥

மதுஸ்பீதா வாசः பரமமம்ருதம் நிர்மிதவதः
தவப்ரம்மந் கிம் வாகபி ஸுரகுரோர்விஸ்மயபதம் ।
மம த்வேதாம் வாணீம் குணகதநபுண்யேந பவதः
புநாமீத்யர்த்தே(அ)ஸ்மிந் புரமதந புத்திர்வ்ய
வஸிதா ॥ 3 ॥

3. பரமேச்வரனே! மதுரமாயும் அம்ருதத்வம் அளிப்பவைகளுமான வாக்யங்களை (வேதங்கள் ஈச்வரனது மூச்சுக்காற்று) வெளியிட்ட உங்களுக்கு தேவ குருவான ப்ருஹஸ்பதியின் வாக்யங்களும் கூட ஆச்சர்யத்தை உண்டு பண்ணுமோ? புண்யமான உன் குணங்களை சொல்லுவதன் மூலம் எனது வாக்கையும் புனிதமாக்கிக் கொள்ளலாமென்கிற எண்ணத்தினால் முப்புரமெரிசெய்த பரமனே! என் புத்தியினால் உன்னைத் துதிசெய்யப் பிரயத்னம் செய்கிறேன்.

तवैश्वर्यं यत्तज्जगदुदयरक्षाप्रळयकृत्
त्रयीवस्तु व्यस्तं तिसृषु गुणभिन्नासु तनुषु।
अभव्यानामस्मिन् वरद रमणीयामरमणीं
विहन्तुं व्याक्रोशीं विदधत इहैके जडधियः ॥ ४ ॥

தவைச்வர்யம் யத்தஜ்ஜகதுதயரக்ஷாப்ரளயக்ருத்
த்ரயீவஸ்து வ்யஸ்தம் திஸ்ருஷு குணபிந்நாஸு
தநுஷு ।
அபவ்யாநாமஸ்மிந் வரத ரமணீயாமரமணீம்
விஹந்தும் வ்யாக்ரோசீம் விததத இஹைகே
ஜடதிய: ॥ 4 ॥

4. வரங்களையெல்லாம் அளிக்கும் பெருமானே! வேதங்களில் நன்கு சொல்லப்பட்ட ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களை ஏற்றுக்கொண்டு உலகைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழிலையும் செய்யும் மூன்று உருவங்களாலான உன் பெருமையை அறியாத சிலர் வேறுவிதமாய் புலம்புகிறார்கள். தாங்கள் அழகாய் பேசுவதாய் நினைத்து பிரயோஜன மற்றவைகளைச் சில மூர்க்கர்கள் இவ்வுலகில் பேசுகிறார்கள்.

किमीहः किं कायस्सखलु किमुपायस्त्रिभुवनम्
किमाधारो धाता सृजति किमुपादान इति च ।
अतर्क्यैश्वर्ये त्वय्यनवसरदुःस्थो हतधियः
कुतर्कोऽयं कांश्चिन्मुखरयति मोहाय जगताम् ॥ ५ ॥

கிமீஹ: கிம்காயஸ்ஸகலு கிமுபாயஸ்த்ரிபுவநம்
கிமாதாரோ தாதா ஸ்ருஜதி கிமுபாதாநஇதிச ।
அதர்க்யைச்வர்யே த்வய்யநவஸரதுஸ்தோ ஹததிய:
குதர்க்கோ(அ)யம் காம்ச்சிந்முகரயதி மோஹாய
ஜகதாம் ॥ 5 ॥

5. ஈச்வரன் இவ்வுலகைப் படைக்க என்ன உருவங் கொள்கிறார்? படைக்க வேண்டிய அவா ஏன்? எவ்வகை

(23)

யான உடலைக் கொண்டு தன் செயலைச் செய்கிறார்? அதற்கு உரிய சாதனங்கள் யாவை? எங்கு தங்கி இருந்து தன் செயலைச் செய்கிறார் என்பது போன்ற ஊகிக்க முடியாத உனது ஐச்வர்யத்தை (தலைமைத் தன்மையை)ச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாதவர்கள் உலகை மயக்கமடையச் செய்யப் பலவாறு பேசுகிறார்கள்.

अजन्मानो लोकाः किमवयववन्तोऽपि जगतां
अधिष्ठातारं किं भवविधिरनादृत्य भवति।
अनीशो वा कुर्याद्भुवनजनने कः परिकरो
यतो मन्दास्त्वां प्रत्यमरवर संशेरत इमे ॥ ६ ॥

அஜந்மானோ லோகா: கிமவயவவந்தோ(அ)பி ஜகதாம்
அதிஷ்டாதாரம் கிம் பவவிதிரநாத்ருத்ய பவதி।
அநீசோ வா குர்யாத்புவநஜநநே க: பரிகர:
யதோ மந்தாஸ்த்வாம் ப்ரத்யமரவர ஸம்சேரத இமே ॥ 6 ॥

6. உன்னைக் காரணமாய்க் கொண்டு உண்டாகி உன் அவயவங்களாய் இருக்கிற லோகங்களை உன்னை வணங்கி அருள்பெறாமல் நான்முகனால் செய்ய முடியுமா? உலகைப் படைப்பதில் ஈச்வரன் ஒருவர் தேவையில்லையென்று சொல்வதானால் அதற்கு ஆதாரமொன்றுமிலது. தேவர்களில் சிறந்தவரே! புத்திக்குறைவுள்ள இவர்கள் இப்படியெல்லாம் உழலுகிறார்கள்.

त्रयी सांख्यं योगः पशुपतिमतं वैष्णवमिति
प्रभिन्ने प्रस्थाने परमिदमदः पथ्यमिति च।

रुचीनां वैचित्र्यादृजुकुटिल नानापथजुषां
नृणामेको गम्यस्त्वमसि पयसामर्णव इव ॥ ७ ॥

த்ரயீ ஸாங்க்யம் யோக: பசுபதிமதம் வைஷ்ணவமிதி
ப்ரபிந்நே ப்ரஸ்தாநே பரமிதமத: பத்யமிதி ச ।
ருசீநாம் வைசித்ர்யாத் ருஜுகுடிலநாநாபதஜுஷாம்
ந்ருணமேகோ கம்யஸ்த்வமஸி பயஸாமர்ணவ
இவ ॥ 7 ॥

7. வேதாந்தம், ஸாங்க்யம், யோகம், சைவம், வைஷ்ணவம் இம்மாதிரி வேறுபட்ட பல சமயங்கள் தங்கள் தங்கள் சமயமே உயர்ந்தது என்று ருசியின் வேறுபாட்டினால் சொல்லுகிறார்கள். நேராயும் கோணலாயும் பல நிறங்களையும் கொண்ட ஆறுகளின் ஜலங்கள் கடலை வந்தடைவது போல எல்லா சமயங்களைச் சார்ந்த மனிதர்களுக்கும் அடைய வேண்டியவன் நீ ஒருவனே.

महोक्षः खट्वांगं परशुरजिनं भस्म फणिनः
कपालं चेतीयत्तव वरद तंत्रोपकरणं ।
सुरास्तां तामृद्धिं दधति तु भवद्भ्रूप्रणिहितां
न हि स्वात्मारामं विषयमृगतृष्णा भ्रमयति ॥ ८ ॥

மஹோக்ஷ: கட்வாங்கம் பரசுரஜிநம் பஸ்ம பணிந:
கபாலம் சேதீயத்தவ வரத தந்த்ரோபகரணம் ।
ஸுராஸ்தாம் தாம்ருத்திம் தததி து பவத்ப்ரூ
ப்ரணிஹிதாம்
ந ஹி ஸ்வாத்மாராமம் விஷய ம்ருகத்ருஷ்ண
ப்ரமயதி ॥ 8 ॥

8. பெரிய காளைமாடு, கத்தி, கோடாரி, மான்தோல், விபூதி, பாம்புகள், மண்டை ஓடு ஆகிய இவைகளே உனக்கு உபகரணங்களாக உள்ளன. பரமேசா, தேவர்கள் அனுபவிக்கும் அந்த செல்வம் உன் புருவ நெரிப்பினுல் கட்டளையின் மூலம் கிடைத்தவை. இந்த எல்லா உலகும் செல்வமும், உன்னிடமிருந்தே எல்லாருக்கும் கிடைப்பவை. ஆனுல் அது உனக்குத் தேவையில்லை. ஆத்மானுபவம் நிறைந்த ஞானிக்கு விஷயங்கள் கானல்நீர் போன்றதே என்பது நிரூபணமாகிறது. [ஸகல செல்வங்களையும் தேவர்க்கும் மற்றையோர்க்கும் தனது ஸங்கல்ப மாத்திரத்தில் அளிக்கும் பரமன் தனக்கென வைத்துக் கொள்வது மிகவும் எளியவைகளேயாகும்].

ध्रुवं कश्चित् सर्वं सकलमपरस्त्व ध्रुवमिदं
परो ध्रौव्याध्रौव्ये जगति गदति व्यस्तविषये।
समस्तेऽप्येतस्मिन् पुरमथन तैर्विस्मित इव
स्तुवन् जिह्रेमि त्वां न खलु ननु धृष्टा मुखरता ॥९॥

த்ருவம் கச்சித் ஸர்வம் ஸகலமபரஸ்த்வ த்ருவமிதம்
பரோ த்ரௌவ்யாத்ரௌவ்யே ஜகதி கததி வ்யஸ்த விஷயே ।
ஸமஸ்தே(அ)ப்யேதஸ்மிந் புரமதந தைர்விஸ்மித இவ
ஸ்துவன் ஜிஹ்ரேமி த்வாம் ந கலு நநு த்ருஷ்டா முகரதா ॥ 9 ॥

9. முப்புரமெரித்த பரமனே! சிலர் இந்த உலகம் நிலையானது என்று கூறுகிறுர்கள். சிலர் இது நிலையற்றது என்று கூறுகிறுர்கள். இன்னும் சிலர் இவையெல்லாம் நிலையுள்ளது, நிலையற்றது என்ற வெவ்வேறு விதமான

தன்மைகளையுடையவை என்கிறார்கள். இத்தகைய இவர்கள் கூற்றுக்களால் குழப்பமடைந்த நான் தங்களைத் துதிக்கத் தயங்கவில்லை. தங்களுடைய பெருமையை முற்றும் அறியாத என்னுடைய இந்தப் பேச்சு என்னுடைய துணிவினைக் காட்டுகிறது.

तवैश्वर्यं यत्नाद्यदुपरि विरिञ्चो हरिरधः
परिच्छेत्तुं यातावनलमनलस्कन्धवपुषः ।
ततो भक्तिश्रद्धाभरगुरु गृणद्भ्यां गिरिश यत्
स्वयं तस्थे ताभ्यां तव किमनुवृत्तिर्न फलति ॥ १०॥

தவைச்வர்யம் யத்நாத்யதுபரி விரிஞ்சோஹரிரத:
பரிச்சேத்தும் யாதாவநலமநலஸ்கந்தவபுஷ: ।
ததோ பக்திச்ரத்தாபரகுரு க்ருணத்ப்யாம் கிரிச யத்
ஸ்வயம் தஸ்தே தாப்யாம் தவ கிமனுவ்ருத்திர் ந
பலதி ॥ 10 ॥

10. ஓ கிரிசனே! உன்பெருமையை அறியமுயற்சித்து ஒளியே உருவான உன்னைத்தேட, விஷ்ணு உனக்கு திருவடிக்கு கீழேயும், நான்முகன் முடிக்கு மேலேயும் சென்று தேடினர். அவர்களால் திருவடியையோ முடியையோ காண முடியவில்லை. பின்னர் மிகவும் சிரத்தையுடன் உன்னைத் துதி செய்தனர். அதற்கு மகிழ்ந்து கருணையுடன் அருள் புரிந்த பரமேசனே, உன்னைத் தொழுது வழிபடும் பக்தர்களுக்கு எதுதான் கிடைக்காது?

ஈசாவாஸ்ய உபநிஷத், ஸ்காந்தம் தேவீபாகவதம் மற்றும் பல இடங்களில் பரமேச்வரன் அடி, முடி காண முடியாத ஒளிப்பிழம்பாய்த் தோன்றி கர்வங்கொண்ட

தேவர்களுக்கு ஞானம் வரச் செய்து அருள்புரிந்தார் என்பது பிரஸித்தமாய்க் கூறப்பட்டுள்ளது.

अयत्नादापाद्य त्रिभुवनमवैरव्यतिकरं
दशास्यो यद्बाहूनभृत रणकण्डूपरवशान् ।
शिरः पद्मश्रेणीरचितचरणाम्भोरुह बलेः
स्थिरायास्त्वद्भक्तेस्त्रिपुरहर विस्फूर्जितमिदम् ॥११॥

அயத்நாதாபாத்ய த்ரிபுவநமவைரவ்யதிகரம்
தசாஸ்யோ யத்பாஹூநப்ருத ரணகண்டூபரவசாந்।
சிர:பத்மச்ரேணீரசிதசரணாம்போருஹ பலே:
ஸ்திராயாஸ்த்வத்பக்தேஸ்த்ரிபுரஹர விஸ்பூர்ஜித மிதம் ॥ 11 ॥

11. முப்புரமெரிசெய்த பரமனே! பத்துத் தலைகளையுடைய ராவணன் மூவுலகிலும் தனக்கு எதிரிகளே இல்லாமல் செய்து வெற்றிகொண்டு பிறகு மேலும் யுத்த விருப்பினனாய் கைத்தினவெடுத்து இருந்தான் எனில் அது உன்னிடம் செலுத்திய பக்தியினாலாகும். அதுவும் தன்னுடைய தலைகளையே தாமரைமலர் போன்று உன்னுடைய திருவடிகளில் ஸமர்ப்பித்த பக்தி அல்லவா?

ஒரு சமயம் ராவணன் தன்னுடைய சிவபூஜையின் போது தன்னுடைய தலைகளையே வெட்டித் தாமரைமலர் போன்று ஸமர்ப்பித்துப் பூஜித்ததாகவும், ஒன்பது தலைகளையும் அம்மாதிரி செய்து பின்னர் பத்தாவது தலையை வெட்ட நினைக்கும்போது சிவபெருமான் பிரத்யக்ஷமாகி அவனது அச்செயலைத் தடுத்து அவனுக்கு வேண்டிய வரங்கள் ஈந்து, அவனது ஒன்பது தலைகளையும் மீண்டும் வர அருள்செய்தார் என்றும் கூறப்படுகிறது. யுத்தத்தில்

எங்கும் வெற்றியே காண பரமன் அவனுக்கு அருள் புரிந்தார்.

अमुष्य त्वत्सेवासमधिगतसारं भुजवनं
बलात्कैलासेऽपि त्वदधिवसतौ विक्रमयतः ।
अलभ्या पातालेऽप्यलसचलिताङ्गुष्ठशिरसि
प्रतिष्ठा त्वय्यासीद् ध्रुवमुपचितो मुह्यति खलः ॥ १२ ॥

அமுஷ்ய த்வத்ஸேவாஸமதிகதஸாரம் புஜவநம்
பலாத்கைலாஸே(அ)பி த்வததிவஸதௌ விக்ர மயத :।
அலப்யா பாதாலே(அ)ப்யலஸசலிதாங்குஷ்ட சிரஸி
ப்ரதிஷ்டாத்வய்யாஸீத் த்ருவமுபசிதோ முஹ்யதி கல : ॥ 12 ॥

12. உன்னைக் குறித்து தவம் செய்து பெற்ற புஜவலிமையை நீ வஸிக்கும் கைலேயங்கிரியிலேயே காட்ட முற்பட்டான். உன் கால் கட்டைவிரலால் அமுக்கப்பட்டு பாதாளத்தில் தேடினுல் கூட கிடைக்காமல் மறைந்துபோய் திகைத்தான் துஷ்டனை இராவணன். துஷ்டர்களுக்கு நல்ல பதவி கிடைத்தால் எவரால அந்நிலே கிடைத்ததோ அவரிடமே அந்த நன்றி மறந்தவர்களாக ஆகிவிடுகிறார்கள்.

यदृद्धिं सुत्राम्णो वरद परमोच्चैरपि सती-
मधश्चक्रे बाणः परिजनविधेयत्रिभुवनः ।
न तच्चित्रं तस्मिन् वरिवसितरि त्वच्चरणयोः
न कस्या उन्नत्यै भवति शिरसस्त्वय्यवनतिः ॥ १३ ॥

யத்ருத்திம் ஸுத்ராம்ணோ வரத பரமோச்சைரபி
ஸதீம்
அதச்சக்ரே பாண: பரிஜநவிதேய த்ரிபுவந: ।
ந தச்சித்ரம் தஸ்மிந் வரிவஸிதரி த்வச்சரணயோ:
ந கஸ்யா உந்நத்யை பவதி சிரஸஸ்த்வய்-
யவநதி: ॥ 13 ॥

13. அருள்புரியும் பரமேச்வரா, பாணன் என்ற அசுரன் தேவராஜாவான இந்திரனது மிகப் பெரிய செல்வத்தையும் பறிபோகும்படி செய்து, மூவுலகையும் தனக்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படி செய்தது ஒரு அதிசயமல்ல. அவன் உன் திருவடிகளில் பக்தி செலுத்தியதே காரணம். உன்திருவடிகளில் தலை வணங்கி பக்தி செய்பவனுக்கு எந்த உயர்ந்த நிலைதான் கிடைக்காது.

अकाण्ड ब्रह्माण्ड क्षयचकित देवासुरकृपा-
विधेयस्याऽऽसीद्यस्त्रिनयन विषं संहृतवतः ।
स कल्माषः कण्ठे तव न कुरुते न श्रियमहो
विकारोऽपि श्लाघ्यो भुवनभय भङ्गव्यसनिनः ॥१४॥

அகாண்ட ப்ரம்மாண்ட க்ஷயசகிததேவாஸுரக்ருபா-
விதேயஸ்யா(ஆ)ஸீத்யஸ்த்ரிநயந விஷம்
ஸம்ஹ்ருதவத :
ஸ கல்மாஷ:கண்டே தவ ந குருதே ந ச்ரியமஹோ
விகாரோ(அ)பி ச்லாக்யோ புவநபய பங்கவ்ய-
ஸநிந: ॥ 14 ॥

14. முக்கண்ணனே ! பாற்கடலை கடையும் பொழுது எதிர்பாரமல் உண்டாகிய பிரும்மாண்டங்களையும்

அழிக்கக்கூடிய ஹாலஹால விஷத்தில் பயந்த தேவர், அஸுரர் கூட்டங்களின் வேண்டுதலுக்கு இணங்கி, அந்த விஷத்தை சாப்பிட்டு உலகைக் காப்பாற்றிய உங்கள் கழுத்தில் தங்கிய அந்த கறை தங்களுக்கு அழகையே செய்தது அல்லவா? உலகைக் காப்பாற்றவேண்டுமெனும் கருணை உள்ளவர்க்கு விகாரமும் அலங்காரமாகவே ஆகும்.

असिद्धार्था नैव क्वचिदपि सदेवासुरनरे
निवर्तन्ते नित्यं जगति जयिनो यस्य विशिखाः।
स पश्यन्नीश त्वामितरसुरसाधारणमभूत्
स्मरः स्मर्तव्यात्मा न हि वशिषु पथ्यः परिभवः॥

அஸித்தார்த்தா நைவ க்வசிதபி ஸதேவாஸுரநரே
நிவர்தத்ந்தே நித்யம் ஜகதி ஜயிநோ யஸ்ய விசிகா:।
ஸ பச்யந்நீச த்வாமிதரஸுரஸாதாரணமபூத்
ஸ்மர:ஸ்மர்த்தவ்யாத்மா ந ஹி வசிஷு பத்ய:
பரிபவ: ॥ 15 ॥

15. ஈசனே! மன்மதனின் மலர்வாளிகள் உலகிலுள்ள தேவர், அரக்கர், மனிதர் எல்லோரிடத்திலும் சென்றால் வெற்றிபெறாமல் திரும்புவதில்லை. அந்தகாமன் சாதாரண தேவர்களைப்போல் உன்னை நினைத்து பார்த்த பொழுது பெயரால் மட்டும் சொல்லும்படியாகி விட்டான். யோகிகளுக்கு செய்யப்படும் அவமானம் நன்மையை விளைக்காது.

मही पादाघाताद्व्रजति सहसा संशयपदं
पदं विष्णोर्भ्राम्यद्भुजपरिघरुग्णग्रहगणम्।
मुहुर्द्यौर्दौस्थ्यं यात्यनिभृत जटाताडिततटा
जगद्रक्षायै त्वं नटसि ननु वामैव विभुता ॥ १६ ॥

மஹீ பாதாகாதாத்வ்ரஜதி ஸஹஸா ஸம்சயபதம்
பதம் விஷ்ணோர்ப்ராம்யத்புஜபரிகருக்ணக்ரஹ
கணம்
முஹுர்த்யௌர்தௌஸ்த்யம் யாத்யநிப்ருதஜடா
தாடித தடா
ஜகத்ரக்ஷாயை த்வம் நடஸி நநு வாமைவ
விபுதா || 16 ||

16. உலகைக் காக்கும்பொருட்டு நீ நடனமாடுகிறாய் கால்களால் உதைப்பதால் (அதாவது நடனத்தின் போது ஒவ்வொர் அடி எடுத்து வைக்கும்போது) பூமியானது தான் இருக்குமோ அல்லது திடீரென்று முடிவடைந்து விடுமோ என்று சந்தேகப்படுகிறது. இரும்புத் தடிகள் போன்ற உனது கரங்களின் வீச்சினால் (கைகளை வீசி ஆடுவதால்) விஷ்ணுவின் ஸ்தானமும் மற்றும் க்ரஹங்களின் கூட்ட முடன் அடிப்பட்டுச் சின்னபின்னமாகிறது. சுழலும் ஜடைக் கற்றைகளால் அடிப்பட்டு வானலோகம் முழுவதும் தத்தளிக்கிறது. ஆஹா! என்ன ஆச்சர்யம்? உனது மஹத்துவமும் கூட துன்பத்திற்குக் காரணமாக உள்ளதே! —இது நிந்தா துஸ்தி போன்று பரமனின் மகத்துவத்தைக் கூறுகிறது.

वियद्व्यापी तारागण गुणितफेनोद्गमरुचिः
प्रवाहो वारां यः पृषतलघुदृष्टशिरसि ते।
जगद्वीपाकारं जलधिवलयं तेन कृतमि—
त्यनेनैवोन्नेयं धृतमहिम दिव्यं तव वपुः ॥ १७ ॥

வியத்வ்யாபீ தாராகணகுணிதபேநோத்கமருசி:
ப்ரவாஹோ வாராம் ய: ப்ருஷதலகுத்ருஷ்டச்
சிரஸி தே ।

ஜகத்த்வீபாகாரம் ஜலதிவலயம் தேந க்ருதமிதி
யநேநைவோந்நேயம் த்ருதமஹிம திவ்யம் தவ
வபு: || 17 ||

17. எந்த நதியானது வானுலகம் முழுமையும் வியாபித்து நக்ஷத்திரக் கூட்டங்கள், க்ரஹக் கூட்டங்களால் மேலும் அழகுடன் காணப்படும் நுரையுடன் கூடியதோ மேலும் இவ்வுலகையும் சூழ்ந்து அதனை ஜலத்தின் மத்தியில் ஒரு த்வீபம் போல் செய்ததோ அந்த கங்காநதியானது உனது தலையில் ஒரு திவலை போல் கிடக்கிறது. இதன் மூலம் உனது திவ்யமான உருவம் எத்தனை பெரியதென்று ஊஹித்துக் கொள்ளலாம்.

रथः क्षोणी यन्ता शतधृतिरगेन्द्रो धनुरथो
रथाङ्गे चन्द्रार्कौ रथचरणपाणिश्शर इति।
दिधक्षोस्ते कोऽयं त्रिपुरतृणमाडम्बरविधिः
विधेयैः क्रीडन्त्यो न खलु परतन्त्राः प्रभुधियः ॥१८॥

ரத: க்ஷோணீ யந்தா சதத்ருதிரகேந்த்ரோ தநுரதோ
ரதாங்கே சந்த்ரார்க்கௌ ரதசரணபாணி: சர இதி
திதக்ஷோஸ்தே கோ(அ)யம் த்ரிபுரத்ருணமாடம்பர
விதி:
விதேயை: க்ரீடந்த்யோ ந கலு பரதந்த்ரா:
ப்ரபுதிய: || 18 ||

18. பூமி தேராயும் நான்முகன் தேரோட்டியாயும் மேருமலை வில்லாயும் சந்திர சூரியர்கள் தேர்ச் சக்கரங்களாயும் விஷ்ணுவே அம்பாகவும், அமைந்து முப்புரத்தை வெற்றிகொள்ள உதவியாக வந்தனர். ஆனால் ஒரு புல்லை

எரிப்பது போல் மூன்றாவது கண்ணினாலேயே எரி செய்து விட்ட உனக்கு உன் ஸேவகர்களான இவர்களின் ஆடம்பரம் எதற்கு? தேவையில்லை எனக்கருத்து. ப்ரபுவாக உள்ளவன் தன் கீழுள்ளவர்களுக்கு அடிமையாவதில்லை. அவர்களது உதவியை எதிர்பார்த்து நிற்பதும் இல்லை. அவர்களை உற்சாகப்படுத்தி விளையாடுவார்கள். இந்த திருபுரஸம்ஹாரக் கதை க்ருஷ்ணயஜுர் வேதம் 6ம் காண்டம் 2வது பிரச்னத்தில் வருகிறது. பொன், வெள்ளி, இரும்பு ஆகிய மூன்று பறக்கும் நகர்களைப்பெற்று உலகைத் துன்புறுத்திய முப்புர அரக்கர்களை எரித்தார். ஆகவே தேவர்கள் இவரை, **பசுபதி** எனத் துதித்தனர்.

हरिस्ते साहस्रं कमलबलिमाधाय पदयो:
यदेकोने तस्मिन् निजमुदहरन्नेत्रकमलम्।
गतो भक्त्युद्रेक: परिणतिमसौ चक्रवपुषा
त्रयाणां रक्षायै त्रिपुरहर जागर्ति जगताम् ॥ १९ ॥

ஹரிஸ்தே ஸாஹஸ்ரம் கமலபலிமாதாயபதயோ:
யதேகோநே தஸ்மிந் நிஜமுதஹரந்நேத்ரகமலம் |
கதோ பக்த்யுத்ரேக: பரிணதிமஸௌ சக்ரவபுஷா
த்ரயாணாம் ரக்ஷாயைத்ரிபுரஹர ஜாகர்த்தி
ஜகதாம் ॥ 19 ॥

19. விஷ்ணுவானவர் உன்னைத் தாமரை மலர்களைக் கொண்டு பூஜித்தார். 1000 மலர்களில் ஒன்று குறைந்தது. உடனே தன் கண்ணை எடுத்து பூஜை செய்ய அந்த மேன்மையான பக்திக்கு மகிழ்ந்து 'சீக்கிரம் வரம் கொடுப்பவர்' என்று பெயர் பெற்ற நீங்கள் அதை மூவுலகையும் காப்பதில் எப்பொழுதும் விழிப்புடன் இருக்கும் ஸுதர்சநசக்ரமாய் மாற்றிக் கொடுத்து அருள் புரிந்தீர்கள்.

क्रतौ सुप्ते जाग्रत्त्वमसि फलयोगे क्रतुमतां
क्व कर्म प्रध्वस्तं फलति पुरुषाराधनमृते ।
अतस्त्वां संप्रेक्ष्य क्रतुषु फलदानप्रतिभुवं
श्रुतौ श्रद्धां बध्वा दृढपरिकरः कर्मसु जनः ॥२०॥

க்ரதௌ ஸுப்தே ஜாக்ரத் த்வமஸி பலயோகே க்ரதுமதாம்
க்வ கர்ம ப்ரத்வஸ்தம் பலதி புருஷாராதநம்ருதே।
அதஸ்த்வாம் ஸம்ப்ரேக்ஷ்ய க்ரதுஷு பலதாந-ப்ரதிபுவம்
ச்ருதௌ ச்ரத்தாம் பத்வாத்ருடபரிகர: கர்மஸு ஜந: ॥ 20 ॥

20. வேள்வி முடிந்திருக்கும் ஸமயம், அந்த வேள்வியை செய்கிறவர்களுக்கு பலன் கொடுக்கக் காத்திருக்கிறாய். உன்னை ஆராதநம் செய்யாமல் எப்படி முடிந்த கர்மாக்களின் பலனை அடைய முடியும். ஆகையாலேயே ஜநங்கள் வேதத்தில் நம்பிக்கை கொண்டு கர்ம பலனைக் கொடுப்பவர் ஆகிய உங்களையே ஆராதித்து பயன் அடைகிறார்கள் வேதம்.

आवो राजानमध्वरस्य रुद्रं होतारं सत्ययजं रोदस्योः ।

யாகங்களுக்கெல்லாம் அரசனான ருத்ரனாகிய பரமேச்வரனைக் குறித்து வேள்வி செய்கிறார்கள். உன்னைக் குறித்து செய்கிற யாக கர்மாக்களை பூவுலகிலும் மேலுலகிலும் உண்மையாகி பலனைக் கொடுக்கிறது.

யஜுர்வேதம் 1வது காண்டம் 3வது ப்ரச்நம் கடைசி அநுவாகம்.

क्रियादक्षो दक्षः क्रतुपतिरधीशस्तनुभृता-
मृषीणामार्त्विज्यं शरणद सदस्याः सुरगणाः।
क्रतुभ्रंशस्त्वत्तः क्रतुफलविधानव्यसनिनो
ध्रुवं कर्तुः श्रद्धाविधुरमभिचाराय हि मखाः ॥२१॥

க்ரியாதக்ஷோ தக்ஷ: க்ரதுபதிரதீசஸ்தநுப்ருதாம்
ருஷீணாமார்த்விஜ்யம் சரணத ஸதஸ்யா: ஸுரகணா: ।
க்ரதுப்ரம்சஸ்த்வத்த:க்ரதுபலவிதாநவ்யஸநிநோ
த்ருவம் கர்த்து: ச்ரத்தாவிதுரமபிசார்ய ஹி மகா: ॥ 21 ॥

21. எல்லோருக்கும் அடைக்கலமளிப்பவரே! யாகங்கள் செய்வதில் சமர்த்தரான தக்ஷப்ரஜாபதியானவர், ரிஷிகளை ரித்விக்குகளாயும், தேவர்களை ஸதஸ்யர்களாயும் வைத்து யாகம் நடத்தினர். யாகங்களுக்கு பலன்களை அளிப்பவரான உன்னிடமிருந்தே அந்த யாகத்துக்கு நாசம் உண்டாகி விட்டது. அதற்கு காரணம் யாகம் செய்கிறவன் உன்னிடம் சிரத்தைக் குறைவுடன் அதாவது உன்னிடம் பக்தியில்லாமல் அதைச் செய்தால் அந்த வேள்வியே ஆபிசாரமாகி யஜமானனையே அழித்து விடும்.

प्रजानाथं नाथ प्रसभमभिकं स्वां दुहितरं
गतं रोहिद्भूतां रिरमयिषुमृष्यस्य वपुषा।
धनुष्पाणेर्यातं दिवमपि सपत्राकृतममुं
त्रसंतंतेऽद्यापि त्यजति न मृगव्याधरभसः ॥ २२ ॥

ப்ரஜாநாதம் நாத ப்ரஸபமபிகம் ஸ்வாம் துஹிதரம்
கதம் ரோஹித்பூதாம் ரிரமயிஷும்ருஷ்யஸ்ய
வபுஷா ।
தநுஷ்பாணேர்யாதம் திவமபி ஸபத்ராக்ருதமமும்
த்ரஸந்தந்தேத்யாபி த்யஜதி ந ம்ருகவ்யாத-
ரபஸ: ॥ 22 ॥

22. உயிர்களைப் படைக்கின்ற நான்முகன் தன்னால் படைக்கப்பட்ட மகளையே (திலோத்தமை) ஆசைப்பட்டு பலாத்காரம் செய்ய ஆரம்பித்தான். பயந்து மிருக உருவெடுத்து ஓடியவளை விடாமல் அதே உருவில் தொடர்ந்து துரத்திச் சென்றவரை வேடன் உருவில் வில்லுடன்சென்று தண்டித்து தப்பு வழியிலிருந்து திருத்தினீர்கள்.

स्वलावण्याशंसा धृतधनुषमह्नाय तृणवत्
पुरः प्लुष्टं दृष्ट्वा पुरमथन पुष्पायुधमपि ।
यदि स्त्रैणं देवी यमनिरत देहार्द्धघटना-
दवैति त्वामद्धा बत वरद मुग्धायुवतयः २३ ॥

ஸ்வலாவண்யாசம்ஸா த்ருததநுஷமஹ்நாய
த்ருணவத்
புர:ப்லுஷ்டம் த்ருஷ்ட்வா புரமதன புஷ்பாயுதமபி ।
யதி ஸ்த்ரைணம் தேவீ யமநிரத தேஹார்த்தகடநாத்
அவைதி த்வாமத்தா பத வரத முக்தா
யுவதய: ॥ 23 ॥

23: முப்புரமெரி செய்தவனே! வரங்களை அளிக்கும் பரமனே! கையில் வில்லுடன் உன் எதிரில் வந்த மன்மதன் சிறு துரும்பு போல எரிந்து போனதைக் கண்கூடாக

நேரிலே கண்டும்கூட, பார்வதி தேவியானவள் அவளது கடுமையான தவத்துக்கு மகிழ்ந்து பாதி உடல் அருளியதைத் தவருக, தன்னுடைய அழகின் செருக்கினால் நீ அவளுடைய மோகத்தில் இருக்கிருய் என்று நினைப்பாளேயானல் அந்தோ! இளம் பெண்களின் மடமை தான் என்னே! (என்றல்லவோ எண்ணவேண்டி உளது).

இந்த்ரிய நிக்ரஹரான ஈசனை தனது அழகினால் வசப்படுத்திப் பாதி சரீரம் எடுத்துக் கொண்டதாகப் பார்வதி தேவியானவள் கருதினால் அது பேதைமையாகும் என்பது தாத்பர்யம்.

स्मशानेष्वाक्रीडा स्मरहर पिशाचास्सहचराः
चिताभस्मालेपः स्रगपि नृकरोटीपरिकरः ।
अमङ्गल्यं शीलं तव भवतु नामैवमखिलं
तथापि स्मर्तॄणां वरद परमं मङ्गलमसि ॥ २४ ॥

ச்மசானேஷ்வாக்ரீடா ஸ்மரஹர பிசாசாஸ்ஸஹசராஃ
சிதாபஸ்மாலேபஃ ஸ்ரகபி ந்ருகரோடிபரிகரஃ ।
அமங்கள்யம் சீலம் தவ பவது நாமைவமகிலம்
ததாபி ஸ்மர்த்ரூணும் வரத ப்ரமம்
மங்களமஸி ॥24 ॥

24. மன்மதனையெரித்தவரே! மயானத்தில் விளையாட்டு கூட இருப்பவர்கள் பிசாசுகள், உடலின் எரிந்த சாம்பலே மேல்பூச்சு, மனித மண்டை ஓடுகளாலான மாலைகள் அமங்களமான இவையெல்லாம் இருக்கட்டும். அப்படி இருந்த போதிலும் இந்த உருவத்தில் உன்னை நினைப்பவர்களுக்கு மிக உயர்ந்த மங்களத்தை நீ கொடுக்கிருய்.

स्वश्रेयसं शिवं भद्रं कल्याणं मङ्गलं परम्

அமரக்காரர் "சிவம்" என்கிற சொல்லுக்கு கல்யாணம், மங்களம், நன்மை என்று பொருள் கூறுகிறார்.

मनः प्रत्यक्चित्ते सविधमवधायात्तमरुतः
प्रहृष्यद्रोमाणः प्रमदसलिलोत्सङ्गितदृशः ।
यदालोक्याह्लादं ह्रद इव निमज्ज्यामृतमये
दधत्यंतस्तत्त्वं किमपि यमिनः तत्किल भवान् ॥२५॥

மந: ப்ரத்யக்சித்தே ஸவிதமவதாயாத்தமருத:
ப்ரஹ்ருஷ்யத்ரோமாணி: ப்ரமதஸலிலோத்-
ஸங்கிதத்ருச: ।
யதாலோக்யாஹ்லாதம் ஹ்ரத இவ நிமஜ்யாம்ருதமயே
ததத்யந்தஸ்தத்வம் கிமபி யமிந: தத்கில
பவாந் ॥ 25 ॥

25. உள்ளே விதிப்படி மூச்சை அடக்கி மயிர்க் கூச்சலிட, கண்களில் நீர் மல்க அம்ருதமயமான மடுவில் மூழ்கி உள்ளே அத்விதீய ஆத்மதத்வமாக யோகிகள் அனுபவித்து அறியும் உண்மைப் பொருள் நீயே.

ப்ராணாயாமத்தாலும் யோகத்தாலும் யோகிகள் அடையக்கூடிய அத்விதீய ஆத்மதத்வம் சிவபெருமானே என கவி பேசுகிறார்.

त्वमर्कस्त्वं सोमस्त्वमसि पवनस्त्वं हुतवहः
त्वमापस्त्वं व्योम त्वमु धरणिरात्मा त्वमिति च ।
परिच्छिन्नामेवं त्वयि परिणता बिभ्रति गिरं
न विद्मस्तत्तत्त्वं वयमिह तु यत् त्वं न भवसि ॥२६॥

த்வமர்க்கஸ்த்வம் ஸோமஸ்த்வமஸி பவநஸ்த்வம்
ஹுதவஹ:
த்வமாபஸ்த்வம் வ்யோம த்வமு தரணிராத்மா
த்வமிதி ச ।
பரிச்சிந்நாமேவம் த்வயி பரிணதா பிப்ரதி கிரம்
ந வித்மஸ்தத்தத்த்வம் வயமிஹ து யத் த்வம் ந
பவஸி ॥ 26 ॥

26. *சூரியன் நீ, சந்திரன், காற்று, நெருப்பு, ஜலம், ஆகாயம், பூமி, ஆத்மா இந்த எல்லாம் நீயே. இம்மாதிரியாக அறிஞர்கள் உன்னைப்பற்றி நினைக்கிறார்கள் இவைகள் ஒரு அளவுக்கு உட்பட்டவைகள். ஆனால் நீயாக இல்லாத ஒரு வஸ்துவை நாங்கள் அறியவில்லை. அதாவது ஸகல வஸ்துக்களும் நீயே என்பது பொருள். இறைவனுடைய அஷ்டமூர்த்தி ஸ்வரூபமும் எல்லாம் அவரேயாகும் தன்மையும் கூறப்படுகிறது.*

त्रयीं तिस्रो वृत्तीस्त्रिभुवनमथो त्रीनपि सुरान्
अकाराद्यैर्वर्णैः त्रिभिरभिदधत्तीर्णविकृति ।
तुरीयं ते धाम ध्वनिभिरवरुन्धानमणुभिः
समस्तं व्यस्तं त्वां शरणद गृणात्योमिति पदम् ॥ २७ ॥

த்ரயீம் திஸ்ரோ வ்ருத்தீஸ்த்ரிபுவநமதோ த்ரீநபி
ஸுராந்
அகாராத்யைர்வர்ணை: த்ரிபிரபிதத த்தீர்ண-
விக்ருதி ।
துரீயந்தே தாம த்வநிபிரவருந்தாநமணுபி:
ஸமஸ்தம் வ்யஸ்தம் த்வாம் சரணத க்ருணாத்-
யோமிதிபதம் ॥ 27 ॥

27. அண்டினவர்களை ஆதரிக்கும் பெருமானே! மூன்று வேதங்கள், ஜாக்ரத்-ஸ்வப்ந-சுஷுப்தி ஆகிய மூன்று நிலைகள், பூலோகம், ஸ்வர்க்க லோகம்,—பாதாளம் எனப்படும் மூன்று உலகங்கள், பிரம்ம-விஷ்ணு-ருத்திரர் எனப்படும் முக்கடவுள்கள் இவைகளை குறிக்கும் அகார, உகார, மகாரங்களாலான 'ஓம்' என்னும் பதம் தனியாக உன்னைக் குறிக்கின்றது. சூக்ஷ்மமான ஒலியினால் சேர்க்கப் பட்ட பிரணவம் 'ஓம்' மொத்தமாக அநாதியான பரபிரம்ம ஸ்வரூபமாக உன்னைக் குறிப்பிடுகிறது.

ओमित्येकाक्षरं ब्रह्म

(தைத்திரியஉபநிஷத் 4ம் பிரச்னம்) ஓம் என்னும் ஓரே எழுத்து பரப்ரும்மம். அவரே ஸகுணவடிவில் பரமேச்வரன் எனப்படுகிறார்.

भवश्शर्वो रुद्रः पशुपतिरथोग्रःसहमहां-

स्तथा भीमेशानाविति यदभिधानाष्टकमिदम् ।

अमुष्मिन्प्रत्येकं प्रविचरति देव श्रुतिरपि

प्रियायास्मै नाम्ने प्रणिहित नमस्योऽस्मि भवते ॥ २८ ॥

பவச்சர்வோருத்ர: பசுபதிரதோக்ரஸ்ஸஹமஹாந்

ததா பீமேசாநாவிதி யதபிதாநாஷ்டகமிதம் ।

அமுஷ்மிந்ப்ரத்யேகம் ப்ரவிசரதி தேவ ச்ருதிரபி

ப்ரியாயாஸ்மை நாம்நே ப்ரணிஹித நமஸ்-

யோஸ்மி பவதே ॥ 28 ॥

28. பவ:, சர்வ:, ருத்ர:, பசுபதி:, உக்ர:, மஹாதேவ, பீம:, ஈசாந: என்கிற இந்த எட்டு பெயர்களையும் உன்னிடத்தில் வேதமானது தனித்தனியாக "தேவ" என்று

பேசுகிறது. அப்படி வேதங்களில் ப்ரியமாய் பேசப்படுகிற அந்த மேலான எட்டுத் திருநாமங்களுக்கும் வணக்கம் செலுத்துகிறேன். (எட்டுப் பெயர்களுக்கும் உடையவனான உன்னை வணங்குகிறேன்.) வேதம்

भवायदेवायनम:

(மந்திர ப்ரச்னம்) யஜுர்வேதம் இம்மாதிரி எட்டு பெயர்களையும் தனித்தனியாக தேவாயநம: என்று பரமேச்வரனைப் பேசுகிறது. இம்மாதிரி வேறு எந்த தெய்வத்தையும் வேதம் பேசவில்லை. எனவே நீதான் எல்லாவற்றிற்கும் உயர்ந்த தெய்வம் என்று கவி கூறுகிறார். வேதத்தை விட மேலான ப்ரமாணமும் உண்டோ ?

नमो नेदिष्ठाय प्रियदव दविष्ठाय च नमो
नमः क्षोदिष्ठाय स्मरहर महिष्ठाय च नमः ।
नमो वर्षिष्ठाय त्रिणयन यविष्ठाय च नमो
नमस्सर्वस्मै ते तदिद मतिशर्वाय च नमः ॥ २९ ॥

நமோ நேதிஷ்டாய ப்ரியதவ தவிஷ்டாய ச நமோ
நம: க்ஷோதிஷ்டாய ஸ்மரஹர மஹிஷ்டாய ச நம: ।
நமோ வர்ஷிஷ்டாய த்ரிணயந யவிஷ்டாய ச நமோ
நமஸ்ஸர்வஸ்மை தே ததித மதிசர்வாய ச நம: ॥ 29 ॥

29. காடுகளை நேசிப்பவரே! மிக அருகிலிருக்கும் உனக்கு வணக்கம் மிகவும் தூரத்திலிருப்பவரான உனக்கு வணக்கம். மன்மதனை எரித்த பிரானே! மிகவும் நுண்மையான உனக்கு வணக்கம். முக்கண்ணனே! மிகவும் பழமையானவரான (முதியவரான) உனக்கு வணக்கம். மிகவும்

புதியவராகவும் (இளமையானவர்) இருக்கும் உனக்கு வணக்கம். எல்லாமாகவும் எல்லாவற்றிற்கும் அப்பாற் பட்டும் நிற்கிற உனக்கு வணக்கம்.

बहुलरजसे विश्वोत्पत्तौ भवाय नमो नमः
प्रबलतमसे तत्संहारे हराय नमो नमः ।
जनसुखकृते सत्त्वोद्रिक्तौ मृडाय नमो नमः
प्रमहसि पदे निस्त्रैगुण्ये शिवाय नमो नमः ॥ ३० ॥

பஹுளரஜஸே விச்வோத்பத்தௌ பவாய நமோ நம:
ப்ரபலதமஸே தத்ஸம்ஹாரே ஹராய நமோ நம:।
ஜநஸுகக்ருதே ஸத்த்வோத்ரிக்தௌ ம்ருடாய நமோ நம:
ப்ரமஹஸி பதே நிஸ்த்ரைகுண்யே சிவாய நமோ நம: ॥ 30 ॥

30. ரஜோகுணம் நிறைந்து உலகைப்படைப்பதில் பவன் என்ற பெயருடனும் ஜனங்களைக் காப்பதில் ஸத்வ குணம் நிறைந்த ம்ருடன் என்ற பெயருடனும் தமோகுணம் நிறைந்து உலகைத்தன்னுள் அடக்கிக்கொள்ளும் ஹரன் என்ற பெயருடனும் முக்குணங்களுக்கும் மேலான குண மற்ற பரப்ரும்மதத்வத்தில் சிவன் என்ற பெயருடனும் விளங்குகிற உனக்குப் பல வணக்கங்களைச் செய்கிறேன்.

படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று காரியங்களையும் செய்யும் மும்மூர்த்திகளும், அவர்களுக் கெல்லாம் மேம்பட்ட துரீய மூர்த்தியுமான முழுமுதற் கடவுளே சிவபெருமான் என்பது தாத்பர்யம்.

कृशपरिणति चेतः क्लेशवश्यं क्व चेदं
क्व च तव गुणसीमोल्लंघिनी शश्वदृद्धिः ।
इति चकितममंदीकृत्य मां भक्तिराधात्
वरद चरणयोस्ते वाक्य पुष्पोपहारम् ॥ ३१ ॥

க்ருசபரிணதி சேத: க்லேசவச்யம் க்வ சேதம்
க்வ ச தவ குணஸீமோல்லங்கிநீ சச்வத்ருத்தி: ।
இதி சகிதமமந்தீக்ருத்ய மாம் பக்திராதாத்
வரத சரணயோஸ்தே வாக்யபுஷ்போப-
ஹாரம் ॥ 31 ॥

**31.** *வரங்களை அளிக்கும் பரமனே! துயரங்களால் பாதிக்கப்பட்டு மெலிந்து அலைந்து கொண்டிருக்கிற மனதோடுகூடிய நான் எங்கே? முக்குணங்களையும் கடந்து மேலான ஐச்வர்யத்துடன் கூடியஈசனான நீ எங்கே? பயந்து கொண்டிருக்கிற என்னை துரிதப்படுத்தி பக்தியில் வ்ருத்தியடையச் செய்து காத்த உங்கள் திருவடித்தாமரைகளில் என் வாக்ய புஷ்பமாலைகளை காணிக்கையாய் ஸமர்ப்பிக்கிறேன்.*

*பக்தியினால் தூண்டப்பட்டே இந்த ஸ்துதிமாலையைச் செய்ததாகவும் வேறு தகுதிகள் தமக்கில்லை எனவும் இங்கு கவி கூறுகிறார்.*

असित गिरिसमं स्यात्कज्जलं सिन्धुपात्रे
सुरतरुवरशाखा लेखिनी पत्रमुर्वी ।
लिखति यदि गृहीत्वा शारदा सर्वकालं
तदपि तव गुणानामीश पारं न याति ॥ ३२ ॥

அஸிதகிரி ஸமம் ஸ்யாத்கஜ்ஜலம் ஸிந்துபாத்ரே
ஸுரதருவரசாகா லேகிநீ பத்ரமுர்வீ ।
லிகதி யதி க்ருஹீத்வா சாரதா ஸர்வகாலம்
ததபி தவ குணாநாமீச பாரம் ந யாதி ॥ 32 ॥

32. பிரபுவே! ஸமுத்ரமே பாத்திரமாகவும், நீல மலையே மையாகவும், தேவ விருக்ஷத்தின் கிளையே எழுது கோலாகவும் இந்த பூமியையே ஓலையாகவும் கொண்டு ஸரஸ்வதி தேவியே ஸர்வ காலமும் எழுதினாலும் கூட உன்னுடைய பெருமைகள் முற்றிலும் எழுதி முடித்துவிட முடியாது. [அங்ஙனமிருக்க உனது மஹிமையை நான் எங்ஙனம் எழுதி முடிக்க முடியும்.]

असुर सुर मुनीन्द्रैरर्चितस्येन्दुमोळेः
ग्रथित गुणमहिम्नो निर्गुणस्येश्वरस्य ।
सकल गणवरिष्ठः पुष्पदन्ताभिधानो
रुचिरमलघुवृत्तैः स्तोत्रमेतच्चकार ॥ ३३ ॥

அஸுர ஸுர முநீந்த்ரைரர்ச்சிதஸ்யேந்துமௌளே:
க்ரதிதகுணமஹிம்நோ நிர்க்குணஸ்யேச்வரஸ்ய ।
ஸகலகணவரிஷ்ட: புஷ்பதந்தாபிதாநோ
ருசிரமலகுவ்ருத்தை: ஸ்தோத்ரமேதச்சகார 33

33. சிவகணங்களில் சிறந்தவரான புஷ்பதந்தர் என்பவரால் எவர் அரக்கர், தேவர் முனிவர் எல்லோராலும் பூஜிக்கப்படுபவரோ, எவர் பிறைச்சந்திரனை முடியில் கொண்டவரோ, எவருடைய குண மஹிமைகள் பாடப் பட்டுள்ளவையோ, ஆனால் எவர் எல்லாவித மான குணங் களுக்கும் அப்பாற்பட்ட பரமாத்மாவோ அத்தகைய

சிவபெருமானைப் புகழ்ந்து இந்த அழகிய விருத்தங்களாலமைந்த இந்த ஸ்துதி மிக்க பக்தியுடன் செய்யப்பட்டது.

अहरहरनवद्यं धूर्जटेः स्तोत्रमेतत्
पठति परम भक्त्या शुद्धचित्तः पुमान् यः ।
स भवति शिवलोके रुद्र तुल्यस्तथाऽत्र
प्रचुरतरधनायुः पुत्रवान् कीर्तिमांश्च ॥ ३४ ॥

அஹரஹரநவத்யம் தூர்ஜடே: ஸ்தோத்ரமேதத்
படதி பரமபக்த்யா சுத்தசித்த: புமாந் ய: ।
ஸ பவதி சிவலோகே ருத்ரதுல்யஸ்ததா(அ)த்ர
ப்ரசுரதரதநாயு: புத்ரவாந் கீர்த்திமாம்ச்ச ॥ 34 ॥

34. தோஷமற்றதான பரமேச்வரனின் இந்த துதியை தினமும் எவனொருவன் மேலான பக்தியுடன் படிக்கிறானோ அவன் சிவலோகத்திலிருப்பான். அங்கு ருத்ரனுக்கொப்பாயிருப்பான். இஹலோகத்தில் நிறைய செல்வமும் நீண்ட ஆயுளும் குழந்தைகளும் புகழும் அடைந்து வாழ்வான்.

महेशान्नापरोदेवः महिम्नां नापरस्तवः ।
अघोरान्नापरो मन्त्रः नास्ति तत्वं गुरोः परम् ॥ ३५ ॥

மஹேசாந்நாபரோ தேவ: மஹிம்நாம் நாபரஸ்தவ: ।
அகோராந்நாபரோ மந்த்ர: நாஸ்திதத்வம்குரோ:
பரம் ॥ 35 ॥

35. ஈச்வரனுக்கு மேலான தெய்வம் கிடையாது. மஹிம்ந ஸ்துதிக்கு மேலான ஸ்துதியும் கிடையாது.

அகோரமந்திரத்திற்கு மேலான மந்திரமும் கிடையாது. குருவிற்கு மேலான தத்வமும் கிடையாது.

दीक्षादानं तपस्तीर्थं योगहोमादिकाः क्रियाः।
महिम्नः स्तवपाठस्य कलां नार्हन्ति षोडशीम् ॥ ३६ ॥

தீக்ஷாதாநம் தபஸ்தீர்த்தம் யோகஹோமாதிகா:
க்ரியா: ।
மஹிம்நஸ் ஸ்தவபாடஸ்ய கலாம் நார்ஹந்தி
ஷோடசீம் ॥ 36 ॥

36. தீக்ஷை, தானம், தவம், தீர்த்தயாத்திரை, யோகம் ஹோமம் முதலிய கர்மாக்கள் எல்லாம் ஒன்று சேர்ந்தாலும் சிவமஹிம்ந ஸ்துதியின் பாராயண பலனில் பதினாறில் ஒரு பங்குக்கிணையாகாது.

कुसुमदशननामा सर्वगन्धर्वराजः
शशिधर वरमौलेर्देवदेवस्य दासः।
स खलु निजमहिम्नो भ्रष्ट एवास्यरोषात्
स्तवनमिदमकार्षीत् दिव्यदिव्यं महिम्न । ३७ ॥

குஸுமதசநநாமா ஸர்வகந்தர்வராஜ:
சசிதரவரமௌளேர் தேவதேவஸ்ய தாஸ: ।
ஸ கலு நிஜமஹிம்நோ ப்ரஷ்ட ஏவாஸ்ய ரோஷாத்
ஸ்தவநமிதமகார்ஷீத் திவ்யதிவ்யம் மஹிம்ந: 37

37. புஷ்பதந்தர் என்று பெயருள்ள கந்தர்வ ராஜன் இளம்பிறைச் சந்திரனை முடியில் கொண்ட ஈசபக்தன்.

அந்த ஈசனின் கோபத்திற்கு ஆளாகி நழுவி விழுந்து இந்த திவ்யமான சிவமஹிம்ந ஸ்துதியைச் செய்தார்.

सुरवर मुनिपूज्यं स्वर्गमोक्षैकहेतुं
पठति यदि मनुष्यः प्रांजलिर्नान्यचेताः।
व्रजति शिवसमीपं किन्नरैः स्तूयमानः
स्तवनमिदममोघं पुष्पदन्तप्रणीतम् । ३८ ॥

ஸுரவரமுநிபூஜ்யம் ஸ்வர்க்கமோக்ஷைகஹேதும்
படதியதிமநுஷ்யஃ ப்ராஞ்ஜலிர்நாந்யசேதாஃ ।
வ்ரஜதி சிவஸமீபம் கிந்நரைஃ ஸ்தூயமாநஃ
ஸ்தவநமிதமமோகம் புஷ்பதந்தப்ரணீதம் ॥ 38 ॥

38, சிறந்த தேவர்களாலும் முனிவர்களாலும் பூஜிக்கப்படுபவரும் ஸ்வர்க்கம் மோக்ஷம் ஆகிய இரண்டையும் அளிப்பவருமான பரமசிவனை வணங்கி, புஷ்பதந்தரால் செய்யப்பட்டதும், தவருது பலனளிக்கக் கூடியதுமான இந்த மஹிம்ந ஸ்துதியை எவனொருவன் ஒருமைப்பட்ட மனத்துடனும் கூப்பிய கரங்களுடனும் படிக்கிருனே அவன் கின்னரர் போன்ற தேவ ஜாதியாராலும் பூஜிக்கப்பட்டு சிவபெருமானை அடைகிருன்.

आसमाप्तमिदं स्तोत्रं पू गन्धर्वभाषितम् ।
असमानं मनोहारि शिवमीश्वरवर्णनम् ॥ ३९ ॥

ஆஸமாப்தமிதம்ஸ்தோத்ரம் பூஜ்யம் கந்தர்வபாஷிதம்
அஸமாநம் மநோஹாரி சிவமீச்வரவர்ணநம் ॥ 39 ॥

39. இந்த துதியில் கடைசிவரை கந்தர்வரால்சொல்லப் பட்டது. பூஜிக்கத் தகுந்தது. இதற்கு நிகரில்லை. மனதுக்கு பிடித்தமானது. மங்களமாயும் ஈச்வரனை வர்ணிப்பதாயும் உள்ளது.

श्रीपुष्पदन्त मुखपङ्कज निर्गितेन
स्तोत्रेण किल्बिषहरेण हरप्रियेण ।
कण्ठस्थितेन पठितेन गृहस्थितेन
सुप्रीणितो भवति भूतपतिर्महेशः ॥ ४० ॥

ஸ்ரீபுஷ்பதந்த முகபங்கஜ நிர்கதேந
ஸ்தோத்ரேண கில்பிஷஹரேண ஹரப்ரியேண ।
கண்டஸ்திதேந படிதேந க்ருஹஸ்திதேந
ஸுப்ரீணிதோ பவதி பூதபதிர்மஹேசः ॥ 40 ॥

40. புஷ்பதந்தரால் செய்யப்பட்டதும் பாவங்களைப் போக்கடிக்கக் கூடியதும் சிவனுக்குப்ரியமானதுமான இந்தத் துதியை மனப்பாடமாகச் செய்து கொண்டு துதித்தாலும், படித்தாலும், வீட்டில் வைத்துக் கொண்டாலும் பூதங்களுக்குத் தலைவரான மஹேச்வரன் மிகவும் ப்ரீதியடைகிறார். அதாவது இந்த ஸ்தோத்ரம் வீட்டில் இருந்தாலே சிவபெருமான் திருவருள் கிடைக்கும் என்பது கருத்து.

इत्येषा वाङ्मयी पूजा श्रीमच्छंकरपादयोः ।
अर्पिता तेन देवेशः प्रीयतां मे सदाशिवः ॥ ४१ ॥

இத்யேஷா வாங்மயீ பூஜா ஸ்ரீமச்சங்கரபாதயோ:
அரப்பிதா தேந தேவேச: ப்ரீயதாம் மே
ஸதாசிவ: || 41 ||

**41.** இம்மாதிரி இந்த வாக்கினாலேயே செய்யக்கூடிய பூஜையானது ஸ்ரீ ஸம்ருத்தியுள்ள சங்கரரின் திருவடிகளில் ஸமர்ப்பிக்கப்பட்டது. அதனால் தேவர்களுக்கெல்லாம் ஈசனான ஸதாசிவன் என்னிடத்தில் ப்ரீதியடையட்டும்.

## உரையாசிரியர் குறிப்பு

கந்தர்வ அரசனான புஷ்பதந்தர் அருளியது இந்த சிவமஹிம்ந ஸ்துதி. அவர் பரமேச்வரரிடத்து அபராதியானதால் பிராயச்சித்தமாக இதைச் செய்ததாய் இந்த துதியிலிருந்தே தெரிய வருகிறது.

இது மனிதரல்லாத தேவரால் செய்யப்பட்டது என்பதாலும், குற்றமிழைத்ததற்கு பிராயச்சித்தமானபடியாலும், குற்றம் நீங்குவது மட்டுமில்லாமல் உலகிலேயே மிக மிக உயர்ந்த மேன்மையை அடைவான் என்பதால் சிவஸ்தோத்ரங்கள் எல்லாவற்றிலுமே இது மிகவும் உயர்ந்ததாய்க் கொள்ளலாம். இதில் பல புராணக்கதைகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. நிறைய புராணங்கள் படித்து தெளிந்தவர்களே இதற்கு முழுதும் நன்கு உரை எழுத முடியும். என் சிற்றறிவுக்கெட்டியவரையில் ஆராய்ச்சி செய்து எழுதியிருக்கிறேன். சிவபெருனுடைய மஹிமையை முழுதும் உணர்ந்துவிட்டேன், எழுதியாகிவிட்டது என யாராலும் சொல்ல இயலாது. பரமேச்வரன் அத்தனை பெருமைவாய்ந்தவர். எங்கும் நிறைந்த பரம புருஷனான அவர் இச்சிறியேனுடைய இந்த உரைமாலையை ஏற்றுக் கொண்டு குற்றமிருந்தால் மன்னித்து எனக்கு அருள் புரிய வேண்டுகிறேன்.

மோக்ஷத்திற்கு மிக முக்யப்படியான ஞானம்

ईश्वरात ज्ञानमन्विच्छेत्

என்ற வாக்யப்படி ஞானம் ஈச்வரனே அருள வேண்டும்.

ज्ञानादेवतु कैवल्यम्

அதாவது ஞானத்தினுலேயே மோக்ஷம் கிடைக்கும். ஆகவே ஞான மோக்ஷ தாதாவான ஸ்ரீ பரமேச்வரனுடைய அருள் கிடைத்தவன் உலகிலேயே சிவனுக் கொப்பானவன். இத்துதியினுல் அம்மாதிரியான நிலை கிடைக்குமென்று தெரிவதால் இதை நன்கு படித்து அருள் பெற்று பிறவிப் பயனை அடைவதோடு ஆங்கீரஸ வேங்கடேச சர்மாவின் இந்த ஞானயக்ஞத்தை ஸபலமாய்ச் செய்யுமாறும் வேண்டுகிறேன்.

**இவ்வாறு புஷ்பதந்தர் செய்ததான சிவமஹிம்நஸ்துதி**
**தமிழ் உரையுடன் முற்றிற்று**

சிவம்

---



---